கவிதைகள்

# கற்பூரப் பெட்டகம்

கவிஞர் வேலூர்
ம.நாராயணன் எம்.ஏ.





நிறைவாணன் பதிப்பகம்

# கற்பூரப் பெட்டகம்

கவிதைகள்

கவிஞர்
வேலூர். ம. நாராயணன் எம்.ஏ.,



நிறைவாணன் பதிப்பகம்
தமிழ்ச்சோலை
3, பெரியார் வீதி,
வேலூர்-9 வ.ஆ.அ.மா.

**KARPURA-P-PETTAGAM**

Poems in Tamizh by Vellore Ma. Narayanan M.A.,

Published by Niraivanan Pathipagam
Tamizh-Cholai, 3, Periyar St., Pavendhar Nagar, Vellore-9, N A.A.Dt.
Printed at Vannam, 7d Cutchery Road, Vaniyambadi 635 751
Wrapper Jamal - Ilustrations Kulasekaran
First Edition November 1989
Price Rs. 15-00

○ கனிவுப் படையல்

நீர்நிறைந்த ஊருணியாய்ப்
பாரவர்க்குப் பரிந்துதவும்
வேலூர் வள்ளல்கள்
ஏ. எஸ். ஏ. பரமசிவம்
டாக்டர் த. குமரகுரு
வி. ஆர். இராதாகிருஷ்ணன்
ஆகியோர்க்கு - இந்தக்
'கற்பூரப் பெட்டக'த்தைக்
கனிவுடன் படையலாக்குகின்றேன்!

○ கவிஞரின் நூல்கள்

கவிதைகள்

★ நிலாமுற்றம்
★ பொற்காலம்
★ செவ்வானம்
★ கற்பூரப் பெட்டகம்

கட்டுரைகள்

★ அறிமுகம்
★ அறிவுத் தாகம்
★ அமுத வெள்ளம்



# பெட்டகத்தைத் திறக்கும் முன்......

அன்பு நிறை நண்பர்களே!
வணக்கம், வாழ்க, வாழ்த்துக.

பல்வேறு நிலைகளில், பல்வேறு பொருள்கள் குறித்துப்பாடிய என்றன் கவிதைகள் 'கற்பூரப்பெட்டக'மாக உருவாகியுள்ளது. பெரும்பாலானவை முன்னரே இதழ்களில் வெளிவந்தவை.

நிகழ்வது பாவேந்தர் நூற்றாண்டு: உலகப் பாவலர்களுள் முதன்மை யானவரான பாவேந்தரின் பாடல்களுள் 'பெண் குழந்தை தாலாட்டும்' ஒன்று: அப்பாடலில்

'மூடத் தனத்தின் முடைநாற்றம் வீசுகின்ற
காடு மணக்க வரும் கற்பூரப் பெட்டகமே'

என்று குழந்தையைக் கொஞ்சுவார் பாவேந்தர்.

என்றன் பாடல்களும், மூடத்தனத்தையும் முடை நாற்றத்தையும் போக்கி இனமானமும், சமுதாய நலனும் கமழ வேண்டும் என்னும் பெருநோக்கோடு பாடப்பெற்றிருப்பதால், இத்தொகுதிக்குக் 'கற்பூரப் பெட்டகம்' எனப் பெயரிட்டுள்ளேன். என் இலக்கியப் பணிகட்கு வேராகவும், நீராகவும் விளங்கும் சான்றோர்கள் வி. எஸ். ரேணுகோபால், வி.ஆர். தங்கவேல், எஸ்.கே.ஜி.பி.கந்தசாமி ஆகியோர் படங்களை கடமை கருதி இந்நூலில் வெளியிட்டுள்ளேன்.

இந்நூல் உருவாகத் துணைபுரிந்த நிறைவாணன் நூல் வெளியீட்டுக்குழு, வேலூர் இலக்கிய அன்பர்கள் வட்டம், வண்ணம் அச்சகம், அணிந்துரை அறிஞர்கள், ஓவியர்கள், ஆகியோர்க்கு என் மணக்கும் நன்றி: இனிக்கும் வணக்கம்.

என்றும் தங்கள் இன்ப அன்பன்,

(வேலூர். ம. நாராயணன் எம்.ஏ.,)

# விரல்களில் தமிழை வைத்திருக்கும் வித்தகர் வேலூரார்!

◀ ஏர்வாடி. எஸ். இராதா கிருஷ்ணன் ▶
ஆசிரியர், கவிதை உறவு, சென்னை.

பொற்குடத்திற்குப் பொட்டிட்டுப் பார்ப்பதைப் போன்ற பேருவகையை இந்தக் 'கற்பூரப் பெட்டகத்திற்கு' அணிந்துரை எழுதுகிறபோது நான் அனுபவிக்கிறேன். நல்ல தமிழால், நயம் தோய்ந்த வரிகளால் உருவான இந்நூல் கவிஞர் வேலூர். ம. நாராயணனின் மணி மகுடத்தில் மேலும் ஒரு மாணிக்கம்.

சேலத்திற்குச் சிறப்பு மாம்பழம், காஞ்சியின் கௌரவம் பட்டு என்பதைப் போல வேலூர்க்கு விலாசமே நண்பர் நாராயணன் என்கிற அளவுக்கு கவிதை இவரைக் காலூன்ற வைத்திருக்கின்றது. நூலின் ஒவ்வொரு பகுதியையும் செம்மையாகப் பிரித்து சிறுசிறு தலைப்பிட்டுச் சிறந்த இருவரிகளையும் தந்திருப்பது நூலின் அழகை அதிகரிக்கிறது. 'நிகழ்வியலில்'

'அச்சத்தின் அறுவடைதான் பக்தி - வாழ்க்கை
அனுபவத்தின் அறுவடைதான் புத்தி'

என்ற வரிகளில் இரண்டாவது வரி குறித்து எனக்கு இரண்டாவது கருத்தில்லை: ஆனால் முதல்வரி 'அன்பினது அறுவடைதான் பக்தி' என்றிருந்தால் இன்னும் அதிகம் உடன்பாடாய் இருந்திருக்கும்.

விரல்களில் தமிழை வைத்திருக்கின்ற வேலூராரின் வித்தகத்தைப் போற்றுகின்றேன். நாளைதான் இவர்க்கு நாற்காலி என்ற நிலை இல்லை: இன்றே இவரை நான் அரியணையில் பார்க்கின்றேன். வார்த்தைகளை வசப்படுத்தி வைத்திருக்கிற இவரால் வாசத்தைத் தமிழுக்கு வழங்க முடியும் என்பதால் வாழ்த்தி மகிழ்கின்றேன்.

## 'கற்பூரப் பெட்டகம்' - புதிய கருத்துப் பேழை! சொற்கோவின் சுந்தரத் தமிழ்க் கோவை!

◀ தி. மா. சேசாசலம் பி.இ., ▶
கட்டிடக்கலை வல்லுநர், வேலூர்.

ஈரடியாலே பாரளந்த எம்பெருமான் நாராயணனை நாம் அறிந்தோமில்லை: ஆனால் 'சீர்' அடியாலே தீமைகளை அடித்து நொறுக்கும் பாவேந்தர் பரம்பரை பாவலர் நாவலர் நாராயணனை நாம் நன்கு அறிவோம். நெஞ்சிருப்பவர்க் கெல்லாம் நெருக்கமானவர். பயில்தொறும் சுவைக்கும் இந்தப் பண்பாளரின் தொடர்பைப் போலவே, இவர்தம் நூல்கள் நவில்தொறும் நலம் பயக்கும்.

இன்றைய சமுதாயம் திரைப்பட மோகத்தில் திளைத்துச் சீரழியும் சிறுமைத்தனத்தைக் கண்டு சினங்கொள்கின்றார். 'என்ன நாடு?' (பக் 20 - 21) என்று கேள்வி எழுப்பி, வியப்படைகின்றார்.

'திரையரங்கில் இளைஞரெல்லாம் 'சீட்டி' யடிக்கிறார்
அதை அருகிலுள்ள பெண்களெல்லாம் அமர்ந்து
இரசிக்கிறார் நன்றாய்
நிமிர்ந்து சிரிக்கிறார்...'

மன வேதனையின் எள்ளல்! கவிதை நடையின் துள்ளல்! எத்தனை முறை பாடினாலும் செவி இன்பம் சேர்கிறது.

தன்மானக் கவிஞரெல்லாம், சன்மானக் கவிஞராகி 'சாகசங்களுக்கு' சரணம் பாடும் இந்நாளில், நம் கவரிமான் சாதிக் கவிஞர் தமிழ் மானம் காத்திடும் கலைஞர் பற்றி அவர் சிம்மாசனம் ஏறும் முன்னரே (1981-இல்) பண் பாடி இசைக்கின்றார். கண்மூடி இருந்த தமிழகம் சிலிர்த்து எழுந்தது. இளைஞர்கட்குத் தன்னம்பிக்கை ஊட்டும் இவரது படைப்புகள் மேலும் தொடர நாளும் வாழ்த்துகிறோம்.

# சிந்தனைத் தேரின் சீரிய நாயகன்

◀ வின்சென்ட் ஜே. இரத்தினசிங் ▶
பாரத ஸ்டேட் வங்கி, வாலாசா.

கவிஞர் வேலூர் ம. நாராயணன் அவர்களின் 'கற்பூரப் பெட்டகம்' கவிதை நூலின் கமழ்மணத்தை நுகர வாய்ப்பு பெற்றமைக்கு அளவிலா மகிழ்ச்சி அடைகிறேன். தமிழ் இலக்கியப் படிப்பினை முடித்து, பாரத வங்கிப் பணியில் தன்னைச் செவ்வனே ஈடுபடுத்திக் கொண்டு, சிறந்த குடும்பத் தலைவனாய்த் தமிழ்ச் சோலையிலே உலா வந்து, படைத்தளிக்கும் யாப்பு நெறி பிறழா கவிதைகள் ஏனைய சான்றோர்க்கு ஒளிவிளக்கு.

'கற்பூரப் பெட்டகம்' திறந்தேன்: கவிதைகள் படித்தேன். அறை முழுவதும் ஒளிச்சிதறல். கவிதைத் தலைப்பை அப்பொழுதுதான் உணர்ந்தேன். 'நிகழ்வியலை' நிலை மறந்து படிக்கையிலே, பந்தயக் குதிரையின் சந்தம் மிகுந்த நடையழகு, என் இதயத் துடிப்பினை ஊஞ்சலாக்கியது. கவிதைகள் 'ஒருமாதிரி' யாய் நடை தவழ்ந்து சென்றதன் காரணம்... 'நளிரியல்!'

'ஓசைப்படாமல் வாழ்ந்திருந்தால்
உலகம் உன்னை மறந்துவிடும்!'
ஆம்! சிந்திக்க வைக்கும் ஓசை வரிகள்!

நம் கவிஞரின் வாழ்த்து மடல், வரவேற்பு மடல், இரங்கற் பா இவற்றிற்கு ஈடு இணை இல்லை. படிக்கின்ற போழ்து நெஞ்சம் தவித்திடும் நிலை தவிர்க்க இயலா.

ஏழாவது நூலையும் திறம்பட இயற்றியுள்ள கவிஞரின் தமிழ்த் தொண்டு வாழிய வாழியவே!



நாராயணன் ★ வி.எஸ். ... தங்கவேல் ★ எஸ்.கே.ஜி.பி. கந்தசாமி

Phone | Off 21717
.. 22877
Res. 20707

**K.RAJU.B.A.** VICE PRESIDENT - LIONS CLUB OF VELLORE

27 MUNDY STREET VELLORE 632004 N A Tamil Nadu

Ref No.

Date 3 11 1989



## பெருமைக்குரியவர்

நம் பெருமைக்குரிய கவிஞர் வேலூர் ம. நாராயணன் என் நெருங்கிய நண்பர்களுள் முதன்மையானவர். மூத்தவர் ஆம்! இளமையில் வேலூர் சர்க்கார் மண்டி பள்ளியில் ஆரம்பித்த எங்கள் நட்பு சென்னை பச்சையப்பன் கல்லூரி வரை தொடர்ந்தது. இன்றும் தொடர்கிறது. தேயாமல் மென்மேலும் இனிக்கின்றது.

வேலூரில் இருந்தபோதே அதே சுறுசுறுப்பு, பழகுதற்கு இனிய பண்பு, நகைச்சுவை உணர்வு, கூர்த்த மதி, தூய அன்பு ஆகியவை இன்றளவும் மாறாமல் இருப்பது வியப்புக்குரிய உண்மையாகும்.

நான்கு நண்பர்கள் குழுமியுள்ள இடத்தில், வருகின்றார் நம் கவிஞர் என்றால், உடனே கலகலப்பும், மகிழ்ச்சியும் இவருடன் கைகோர்த்துக் கொண்டு வந்துவிடும். வாதங்கள், விவாதங்கள் பறக்கும். முடிவில் நல்லதொரு தெளிவு பிறந்தது அங்கு, இயற்கையாகவே ஒரு 'சிந்தனையில்லாத சிந்தனை அரங்கமாக' மாறிவிடும்.

"[illegible]" பண்பினரான நம் கவிஞர் தமிழ்த் தொண்டாற்றியும், அரிய நூல்கள் யாத்தும் புகழ் இமயம் ஏறி வருகின்றார். விரைவில் அவர் உச்சியை அடைய வாழ்த்தி மகிழ்கிறேன்.

நட்பின் வெள்ளி விழா கடந்தும் நாங்கள் பொன்விழா, வைர விழா, நூற்றாண்டு விழாக்களையும் காண வேண்டும் என அவாவுகிறேன்.

அன்பன்,

க. இராசு

3.11.89

# ○ நிகழ்வியல்



*அச்சத்தின் அறுவடைதான் பக்தி; வாழ்க்கை அனுபவத்தின் அறுவடைதான் புத்தி!*

ஓ...எழுத்தாளர்களே! 11
செவ்வானம் 13
நடைமுறைகள் 15
எப்படி ஒத்துவரும்? 17
பட்டறிவு 18
என்ன நாடு 20
வறுமைக்கோடு 22
நமது நிலை 24
பெருமை 25
அறுவடை 26
வெப்பம் 28
சொர்க்கம் காண்போம் 30
எங்கள் நாட்டில் 32
கலங்குகிறேன் 34
மறந்துவிட்டேன் 36
ஒரு மாதிரி... 39

## ○ ஓ...எழுத்தாளர்களே!

எல்லோரும் ஒருங்கிணைந்து
படிப்ப தற்கு
ஏற்றவகை நூல்களைநாம்
இயற்ற வேண்டும்
பல்லாண்டு காலங்கள்
வாழ்ந்தி ருந்து
பயன்விளைக்கும் கருத்துகளைச்
சொல்ல வேண்டும்!
அல்லாமல் ஓரிருவர்
தனித்தி ருந்து
அற்பசுகம் காண்பதற்கு
நூல்கள் செய்தால்
நல்லாரின் பொல்லாங்கு
வந்து சேரும்
நாளடைவில் முகவரிகள்
தொலைந்து போகும்!

கலைவளர்க்கும் நோக்கத்தைக்
    கருத்தில் கொண்டே
கதை: கவிதை: கட்டுரைகள்
    தீட்ட வேண்டும்
தலைமுறைக்கு நாம்புத்தி
    சொல்லும் முன்னர்
தெளிந்தமனம்: சொல்: செயல்கள்
    நமக்கு வேண்டும்!
அலைவரிசைப் புலவரிடை
    தலைமை காண
அவசரத்தில் நாம்வரையும்
    எழுத்துக் கோலம்
நிலையின்றிக் காலத்தால்
    கரைந்து போகும்!
நாளடைவில் முகவரிகள்
    தொலைந்து போகும்!

## ○ செவ்வானம்

ஓவியத்துத் தேனடையில்
தேன்வ ழிந்து
ஓடையென ஓடட்டும்!
நமக்கு என்ன?
காவியத்துப் பொய்கைதனில்
பூக்கள் பூத்துக்
காதலரை ஈர்க்கட்டும்
நமக்கு என்ன?
ஆவிதனைப் பணயமாக
வைத்து நாளும்
அரும்பாடு படுகின்றோம்!
இலாபம் என்ன?
நீவிட்ட மூங்கிலைப்போல்
நிமிர்ந்தெ ழுந்தால்
நிச்சயமாய்த் தோன்றும் 'செவ்
வானம்' இங்கே!

அன்றாடம் பண்டிகைகள்
தெருக்கள் தோறும்
ஆரவாரக் கூச்சல்கள்:
இருந்தும் என்ன?
தென்றலெனச் சுகம் நல்கும்
தேர்தல் காலத்
தித்திப்பு வாக்குறுதி!
இருந்தும் என்ன?
மன்றாடி மன்றாடி
இரத்த வேர்வை
முப்போதும் சிந்துகின்றோம்:
இலாபம் என்ன?
என்றேனும் வரட்டுமெனக்
காத்தி ராமல்
இன்றேநாம் விழிதிறப்போம்:
சிவக்கும் வானம்!

-ஆக்கம்
மே 1988

## ○ நடை முறைகள்

நாணலே தென்னை யாகும்
நெருஞ்சியே முல்லை யாகும்
பானைகள் பாறை யாகிப்
பாதையின் குறுக்கே நிற்கும்
வீணைகள் விறகாய் மாறும்
வெளிச்சமே அச்சம் நல்கும்
நானிதைக் காணு கின்றேன்
நடைமுறை வாழ்வில் தானே!

கானலே பொய்கை யாகும்
கல்வியே இல்லார் நெஞ்சக்
கோணலே தலைமை தாங்கும்
கொள்கைநீர்க் குமிழ்கள் ஆகும்!
நாணமே ஆண்கள் பண்பு!
நடிப்பதே உண்மை அன்பு!
நானிதைக் காணு கின்றேன்
நடைமுறை வாழ்வில் தானே!

ஊனுடை போதும்: மானம்
உயிரெலாம் வெட்கக் கேடு!
தேனடைப் பேச்சு போதும்
செயல்திறன் ஏனோ? என்னும்
கூனலின் இடுப்பொ டிக்குங்
கருத்தினர் குதிரைக் கொம்பே!
நானிதைக் காணு கின்றேன்
நடைமுறை வாழ்வில் தானே!

-கவிதை உறவு
மார்ச் 1988

## ○ எப்படி ஒத்து வரும்?

உலகம் எப்படி ஒத்துவரும்? - இந்த
உலகம் எப்படி ஒத்துவரும்? - உன்னுடன்
உலகம் எப்படி ஒத்துவரும்?

உன்றன் கருத்தும் உன்றன் போக்கும்
உன்னள வில்தாம் உயர்ந்தவை: உரியவை!
உன்னிலும் உயர்ந்தவர் உதிர்த்திடும் கருத்தை
உன்மனம் ஒப்பிடத் தயங்கிடும் பொழுது...
(உலகம் எப்படி ஒத்துவரும்?)

உன்றன் உள்ளம் உள்ளுவ தெல்லாம்
நன்முறை ஏற்கவும் நடைமுறைப் படுத்தவும்
உன்னரும் மனைவியும் மகளும் மகனுமே
பன்முறை மறுத்து ஒதுங்கிடும் பொழுது
(உலகம் எப்படி ஒத்துவரும்?)

மாற்றார் உணர்வுகள் மதித்திடப் பழகு
தூற்றும் பகையையும் துதித்திடல் அழகு
ஆற்றங் கரைவளர் நாணலைப் போன்றே
காற்றில் வளையநீ கசந்திடும் பொழுது...
(உலகம் எப்படி ஒத்துவரும்?)

-தமிழ்ப்பணி
தூலை 1989

இன்பமெனும் தேனூற்றின்
விளம்பு தன்னில்
எப்பொழுதும் ஈமொய்க்கும்:
எறும்பும் சுற்றும்
துன்பமெனும் தீவந்து
சூழும் வேளை
சொந்தங்கள் நமைவிட்டு
விலகும்: ஓடும்!
பின்னணிகள் பலமாக
அமைந்தால் மோதும்
பகையெல்லாம் புறமுதுகைக்
காட்டும்: இந்த
உண்மைகளைப் புரிந்துகொள்ள
என்ன வேண்டும்?
உலகத்தில் பட்டறிவே
எவர்க்கும் வேண்டும்!

சிரிப்பவர்கள் எல்லோரும்
உறவு மல்ல
திருத்தங்கள் சொல்பவர்கள்
பகையு மல்ல
விரிந்திருக்கும் வேதங்கள்
இதிகா சங்கள்
வகைவகையாய் இலக்கியங்கள்
இருந்து மென்ன?
பரந்திருக்கும் மாநிலங்கள்
புத்த கங்கள்
பார்க்கின்ற மாந்தரெலாம்
அத்தி யாயம்!
உறவினத்தார் புறவினத்தார்
பேதம் காண
உலகத்தில் பட்டறிவே
எவர்க்கும் வேண்டும்!

-பேமிலி லிங்க்
பாரத வங்கி இதழ்
பிப்ரவரி 1988

## ○ என்ன நாடு!

என்ன நாடு! என்ன மக்கள்!
என்றன் தோழரே - இது
சின்னவர்கள் மலிந்திருக்கும்
சிறுமை நாடிதே! - அதனால்
வறுமை நாடிதே!

என்ன நகரம்! என்னவீதி!
என்றன் தோழரே! - எங்கும்
கண்ணிரண்டைக் கூசவைக்கும்
கந்தல் கோலமே! - நாறும்
குப்பைக் கூளமே!

திரையரங்கில் இளைஞரெலாம்
'சீட்டி' யடிக்கிறார் - அதை
அருகிலுள்ள பெண்களெல்லாம்
அமர்ந்து இரசிக்கிறார் - நன்றாய்
நிமிர்ந்து சிரிக்கிறார்!

தனதுவீர(?) நடிகர் திரையில்
தோன்றும் வேளையில் - பலர்
மணக்கும்பூவும் சில்லறையும்
வாரி இறைக்கிறார் - நாயாய்
மாறி குரைக்கிறார்!

என்ன நாடு! என்ன மக்கள்!
என்றன் தோழரே! இனியும்
இந்தவண்ணம் நாமிருந்தால்
இன்னல் வளருமே - சான்றோர்
இதயம் வெடிக்குமே!

-கவிதை உறவு
டிசம்பர் 1988

## ○ வறுமைக் கோடு

திருத்தங்கள் பலவேண்டும்
வேண்டு மென்றே
தெருத்தோறும் முழக்கமிடும்
நமது நாடு
கருத்துமுதல் வாதத்தின்
குப்பை மேடு
கற்பனையில் சுகங்காணும்
எருமை மாடு!
பொருள்முதலின் சிறப்பியல்பை
உணர்ந்தி டாமல்
பொழுதெல்லாம் அலறுகின்ற
ஆந்தைக் கூடு!
அருள்முதலே போதுமென்று
அமர்ந்தி ருந்தால்
அழிந்திடுமோ நாம்வரைந்த
வறுமைக் கோடு!

நண்டுகளே படைவீரர்:
நாற்றங் காலின்
நத்தைகளே முடிவேந்தர்:
நன்மை தீமை
விண்டுரைக்கும் அறிஞர்களோ
விட்டில் பூச்சி!
வீரியன்கள் தளபதிகள்!
பாவம்! இங்கே
மண்புழுக்கள் குடிமக்கள்!
மதுவில் தோயும்
வண்டினமே மதத்தலைவர்
என்றி ருந்தால்
கொண்டிருக்கும் கொடுமையெலாம்
மறைவ தேது?
கோணல்கள் நேர்க்கோடும்
ஆவ தேது?

-வேலூர் தெற்கு ரோட்டரி
தென்றல் இதழ் 1938

## ○ நமது நிலை

பணியால் பயிர்கள் வளர்வதில்லை
பசிநெருப் பிற்கோ உருவமில்லை
சினத்தால் வெற்றிகள் விளைவதில்லை
சிந்தித் துழைத்தால் தோல்வியில்லை
இனிக்கும் உறவுகள் தொடர்வதில்லை
இச்சக நட்புகள் நிலைப்பதில்லை
கணக்கில் லாமல் செலவழித்தால்
காகிதப் படகே நமதுநிலை!

அணிமணி ஆடைகள் பெருமையில்லை
அஞ்சுவ தஞ்சல் தவறுமில்லை
கனியென எட்டிப் பழுத்திருந்தும்
கொத்தும் கிளிகள் வருவதில்லை
தனித்தனி மாந்தரின் தொண்டெல்லாம்
தெருமுனை வரைக்கும் செல்வதில்லை
குனிந்திருக் கும்நம் சமுதாயம்
'கூட்டுறவு' இன்றேல் நிமிர்வதில்லை!

-கூட்டுறவு
சூலை 1939

## ○ பெருமை

குடியரசு என்றென்னைச்
சொல்லிக் கொள்ளக்
குடிக்கின்ற பழக்கமெனக்(கு)
என்றும் இல்லை!
முடியரசு என்றும்நான்
சொல்ல மாட்டேன்
முழுநிலவென் தலையில்முகம்
பார்ப்ப தாலே!
தடியரசு என்றென்னைச்
சொல்லு தற்கோ
தடித்தனத்தில் நம்பிக்கை
எனக்கு இல்லை!
படிப்பரசு என்றால்நான்
பெருமை கொள்வேன்
படிப்பதற்கு என்றேஉயிர்
வாழ்வ தாலே!

-வண்ணப்பூங்கா
ஆகஸ்டு 1989

## ○ அறுவடை

அச்சத்தின் அறுவடைதான்
பக்தி: வாழ்க்கை
அனுபவத்தின் அறுவடைதான்
புத்தி! செல்வ
மிச்சத்தின் அறுவடைதான்
குடியும் கூத்தும்
மோகத்தின் அறுவடைதான்
துன்பம்: கன்ன
மச்சத்தின் அறுவடைதான்
வளமை யென்பர்
மடமைதனில் ஊறியுள்ள
மக்கள்: கர்வ
உச்சத்தின் அறுவடைதான்
சரிவு: ஒத்த
உள்ளத்தின் அறுவடைதான்
ஒருமைப் பாடு!

உணர்வுகளின் அறுவடைதான்
கலைகள்: மேனி
உரசல்களின் அறுவடைதான்
மழலை! நாக்குத்
தினவுகளின் அறுவடைதான்
குத்தும் வெட்டும்
திறமைகளின் அறுவடைதான்
பதவிஉ யர்வு!
மனத்தெளிவின் அறுவடைதான்
நிறைந்த வாழ்வு!
மணமலரின் அறுவடைதான்
பன்னீர்: சான்றோர்
கனவுகளின் அறுவடைதான்
கண்டுபி டிப்பு!
கண்ணியத்தின் அறுவடைதான்
நல்லம திப்பு!

-பேமிலிலிங்க்
பிப்ரவரி 1989

## ○ வெப்பம்

---

கதிர்வெப்பம் மிகுந்தால்நீர்க்
குளங்கள் வற்றும்
கடன்வெப்பம் மிகுந்தால்நம்
நலன்கள் குன்றும்
மதிவெப்பம் மிகுந்தால்நற்
கருத்து தோன்றும்
மனவெப்பம் மிகுந்தால்முன்
கோபம் தோன்றும்
எதில்வெப்பம் மிகுந்தாலும்
இல்ல றத்தில்
எப்போதும் குளிர்ச்சிவேண்டும்!
இல்லை யென்றால்
பதிலுக்குப் பதில்வெப்பம்
வளரும்! பாவம்
பிள்ளைகளின் முதுகுத்தோல்
உரிந்து போகும்!

கடல்வெப்பம் மிகுந்திருந்தால்
புழுக்கம் தோன்றும்
கைவெப்பம் மிகுந்திருந்தால்
திருடத் தோன்றும்
உடல்வெப்பம் சீராக
இருப்ப தற்கு
ஒவ்வாத உணவுகளைத்
தவிர்க்க வேண்டும்!
குடல்வெப்பம் மிகுந்திருக்கும்
உழைக்கும் வர்க்கம்
கொதித்தெழுந்தால் செல்வமெலாம்
குவிந்தி ருக்கும்
திடல்வெப்பம் காணும்பின்
சமன்மை தோன்றும்!
திக்கெட்டும் மகிழ்ச்சிவெப்பம்
நிலைத்தி ருக்கும்!

-கவிதை உறவு
ஏப்ரல் 1988

## ○ சொர்க்கம் காண்போம்!

*மலர்களின் கூட்டுறவே சோலை: அன்பு*
*மனங்களின் கூட்டுறவே குடும்பம்: செப்புச்*
*சிலைகளின் கூட்டுறவே கோயில்: சான்றோர்*
*சிந்தனையின் கூட்டுறவே அமைதி வாயில்!*

*கலைகளின் கூட்டுறவே கூத்து: நாற்றங்*
*கால்களின் கூட்டுறவே நன்செய்: ஆழி*
*அலைகளின் கூட்டுறவே ஓசை: நெஞ்ச*
*அதிர்வுகளின் கூட்டுறவே ஆசை பாசம்!*

*புள்ளிகளின் கூட்டுறவே கோடு: தூய*
*பண்புகளின் கூட்டுறவே நாடு: காய்ந்த*
*சுள்ளிகளின் கூட்டுறவே பறவைக் கூடு:*
*தொல்லைகளின் கூட்டுறவே ஏழை பாடு!*

நாள்களின் கூட்டுறவே ஆண்டு: நெய்த
நூல்களின் கூட்டுறவே ஆடை: மண்ணின்
தூள்களின் கூட்டுறவே வீடு: பச்சைத்
தளிர்களின் கூட்டுறவே அடர்ந்த காடு!

தனித்தனி வாழ்க்கையினால் வளர்ச்சி இல்லை
தழைத்திடும் கூட்டுறவே புகழின் எல்லை
இனித்திடும் கூட்டுறவை அரவ ணைப்போம்
இவ்வுல கிலேயேநாம் சொர்க்கம் காண்போம்!

-கூட்டுறவு
அக்டோபர் 1988

## ○ எங்கள் நாட்டில்...

போதையிலே பிதற்றுகின்ற
　　உளற லெல்லாம்
பேரறிவுப் பொன்மொழிகள்:
　　கண்ண டித்துப்
பாதையிலே மேனிதனை
　　மினுக்கு கின்ற
பாவையரே பெண்குலத்தின்
　　பொன்வி ளக்கு!
சாதனைகள் புரிகின்ற
　　சான்றோர் பாவம்
சரியான பைத்தியங்கள்!
　　வாழ்நாள் முற்றும்
சோதனையில் தத்தளிக்கும்
　　ஏழை மக்கள்
தலையெழுத்தை அனுபவிக்கும்
　　சோற்றுப் பிண்டம்!

ஒன்றிரண்டு நண்பரெல்லாம்
ஒருங்கி ணைந்தால்
ஒரேநாளில் புதுக்கட்சி
தோன்றும்: அந்த
ஒன்றிரண்டு நண்பருள்ளும்
திரைப்ப டங்கள்
ஒன்றிரண்டில் நடித்தவர்தாம்
தலைவர்: கட்சித்
தொண்டரெலாம் தேவையில்லை:
பணங்கொ டுத்தால்
தோரணங்கள்: கொடிக்கம்பம்
ஊர்வ லங்கள்
விண்ணதிரும் முழக்கங்கள்
முழங்கும்: இந்த
வேதனைகள் சகிப்பவர்க்கே
இங்கே வாழ்க்கை!

## ○ கலங்குகிறேன்!

ஞாயிறு வந்தால்
    கலங்குகிறேன் - நல்ல
நாள்களும் வந்தால்
    கலங்கு கிறேன் - என்
தாயெனும் வங்கிப்
    பணியினுக்கே - அவை
தடைக்கல் லாகவே
    வாய்ப்பதனால்...

(ஞாயிறு வந்தால்...)

பிறந்தவர் மறுமுறை
    பிறப்பதில்லை - மீண்டும்
பிறப்போம் என்றவர்
    பிறந்ததில்லை - அறிவு
செறிந்திருக் கும்வரை
    மக்களுக்கு - தூய
தொண்டுகள் ஆற்றிடத்
    துடிப்பதனால்...

(ஞாயிறு வந்தால்...)

என்இனம்: என்மொழி
என்நாடு - எனும்
எண்ணமே நெஞ்சில்
தளும்புதம்மா - இதில்
சின்னாள் விடுமுறை
கிடைத்தாலும் - அந்தச்
சிந்தையில் குறைவுகள்
நேர்வதனால்...

(ஞாயிறு வந்தால்...)

கண்கள் வேண்டும்
காண்பதற்கு - சொந்தக்
கருவிகள் வேண்டும்
உழைப்பதற்கு - என்னிரு
கண்ணும் கருவியும்
வங்கியென்றே - வாழுங்
காலம் முழுவதும்
கருதுவதால்...

-பேமிலி லிங்க்
ஏப்ரல்-ஜூன் 1989

## ○ மறந்தே விட்டேன்!

அன்னையவள் அரவணைப்பில்
அந்த நாளில்
அழகுதமிழ் சொல்லனைத்தும்
படித்தேன்: பின்னர்
சின்னவர்கள் மகிழ்ந்திலங்கும்
தொடக்கப் பள்ளி
தனில் சேர்ந்தேன்: அரிச்சுவடி
நீதி நூல்கள்
திண்ணமுறப் படித்தேன்:பின்
உயர்நிலைப் பள்ளி
சேர்ந்தங்கே அறிவியலைப்
புவிவர லாற்றை
உண்மையுடன் ஆழ்ந்தகன்று
படித்தேன்: ஆனால்
ஒன்றைமட்டும் படிப்பதற்கு
மறந்தே விட்டேன்!

கல்லூரி தனில்சேர்ந்தேன்
காலம் போற்றும்
கணிதத்தை ஆங்கிலத்தைப்
படித்தேன்: மண்ணில்
நல்லவனாய் வாழவழி
காட்டு கின்ற
நீடுபுகழ்த் திருக்குறளைப்
படித்தேன்: மிக்க
வல்லவனாய் விளங்கப்பிற
நாட்டு வீரர்
வரலாறு பலநூறு
படித்தேன்: ஆமாம்!
ஒல்லும்வகை எல்லாமும்
படித்தேன்: ஆனால்
ஒன்றைமட்டும் படிப்பதற்கு
மறந்தே விட்டேன்!

நேற்றுவரை நண்பர்களாய்
இருந்தோர்: நித்தம்
நிச்சயமாய் எனதுயிர்நீ!
என்றோர்: நெல்லின்
நாற்றங்கால் போலெனவே
வாழ்நாள் முற்றும்
நமதுசுற்றம் எனச்சொன்னோ
ரெல்லாம் சூறைக்
காற்றெனவே நெருக்கடிகள்
எம்மை மோதும்
கடிதான வேளைதனில்
விலகி ஓடும்
நாற்றமனப் பான்மைதனைப்
படிப்ப தற்கு
நானிலத்தில் இன்றுவரை
மறந்தே விட்டேன்!

-கவிதை உறவு
மார்ச் 1989

## ○ ஒரு மாதிரி...

ஒருமாதிரி தான்
இருக்கும் - ஆனால்
ஒரே மாதிரி
இருப்ப தில்லை...
இரண்டிற்கும் இடையே
முரண் இருக்கும் - அதன்
இயல்புகள் உணர்ந்தால்
பயன் இருக்கும்!

வழிவழி வறுமையில்
வாடுவதும் - நன்கு
வாழ்ந்தவர் வறுமையில்
வதங்குவதும்...
(ஒரு மாதிரி...)

அறிஞர்கள் அவைதனில்
பேசுவதும் - சில
அசடர்கள் அவர்போல்
முழங்குவதும்...
(ஒரு மாதிரி...)

ஒழுக்கம் உடையவர்
    நடையுடையும் - துளி
ஒழுக்கமும் இல்லார்
    பாவனையும்....
        (ஒரு மாதிரி...)
வளர்கலை செழித்திட
    ஈவதுவும் - சுய
விளம்பரம் தேடிட
    இறைப்பதுவும்...
        (ஒரு மாதிரி...)



ஓசைப் படாமல் வாழ்ந்திருந்தால்
உலகம் உன்னை மறந்துவிடும்!

தவிர்த்துவிடு 43

மணியாயிரு 44

நிலை உயர்த்தும் 46

மறந்து விடும் 48

கடல் 49

மலை 51

ஆறு 52

# ○ தவிர்த்து விடு!

தவிர்த்து விடு! தம்பி! தவிர்த்துவிடு!
தடித்த சொற்களைத் தவிர்த்துவிடு!
குவித்து விடு! தம்பி! குவித்துவிடு!
கனிந்த சொற்களைக் குவித்துவிடு!

(தவிர்த்து விடு...!)

தடித்த சொற்களால் சண்டைகள் வளரும்
சிற்சில தருணம் தலைகளும் உருளும்
வடித்தெ டுத்தநல் லினிய சொற்களால்
விலகும் உறவுகள் வந்துமைத் தழுவும்!

(தவிர்த்து விடு..!)

கொஞ்சும் நட்பினர் கொத்திய போழ்தும்
வஞ்சித் தும்மை வீழ்த்திய போழ்தும்
மிஞ்ச வரும்பகை மோதிய போழ்தும்
பஞ்சினும் மெல்லிய பேச்சினைக் கொள்வாய்!

(தவிர்த்து விடு...!)

அவரவர் கருத்து அவரவர்க் கியல்பு
அவரவர் நீதி அவரவர்க் குயர்வு
ஏவரெவர் கருத்தில் எவையெவை நீதி:
எதிர்வருங் காலம் நிச்சயம் உணர்த்தும்!

(தவிர்த்து விடு...!)

-பேமிலிலிங்க்
ஏப்ரல்-சூன் 1988

## ○ மணியாயிரு!

மணியாயிரு! கண்ணே!
    மணியாயிரு! - இந்த
மானுடக் குப்பையில்
    மணியாயிரு!
அணியாயிரு! கண்ணே!
    அணியாயிரு! - என்றும்
அவனிக்குப் புகழ்சேர்க்கும்
    அணியாயிரு!

கனியாயிரு! வாழைக்
    கனியாயிரு! - மூன்று
காலங்கள் தோறும்நல்
    பணியாயிரு!
முனியாதிரு! எங்கும்
    முனியாதிரு! - வீணில்
மூள்கின்ற பகையெனினும்
    முனியாதிரு!

தணியாதிரு! நாளும்
தணியாதிரு! - அன்னைத்
தமிழ்மொழி வேட்கையில்
தணியாதிரு!
துணிவாயிரு! எதிலும்
துணிவாயிரு! - துயர்
சூழ்கின்ற பொழுதெலாம்
துணிவாயிரு!

நினைவாயிரு! தூய
நினைவாயிரு! - நலம்
நல்கிடும் கல்விக்கு
மனையாயிரு!
துணையாயிரு! வாழ்வில்
துணையாயிரு! - கற்ற
சான்றோர்தம் முயற்சிக்குத்
துணையாயிரு!

-பேமிலி லிங்க்
ஜூலை-செப்டம்பர் 1988

சாம்பலின் நடுவில்
நெருப்பிருக்கும் - கொஞ்சம்
தூண்டி விட்டாலங்கு
பொறி பறக்கும் - பெரும்
பயன் விளைக்கும்!

சாதனை உன்னுள்
செறிந் திருக்கும் - தக்க
தருணம் வந்தாலது
தலை நிமிர்த்தும் - பலர்
நிலை உயர்த்தும்!

-செந்தளிர் - 2-9-88
சென்னை வானொலி

## ○ நிலை உயர்த்தும்!

சோம்பிக் கிடந்தால்
துருப் பிடிக்கும் - மூளை
சோம்பிக் கிடந்தால்
துருப் பிடிக்கும் - வாழ்வே
வெறுப் பெடுக்கும்!

சிந்தித் திருந்தால்
கூராகும் - தினம்
சிந்தித் திருந்தால்
கூராகும் - அறிவும்
நேராகும்!

சாம்பலின் நடுவில்
நெருப்பிருக்கும் - கொஞ்சம்
தூண்டி விட்டாலங்கு
பொறி பறக்கும் - பெரும்
பயன் விளைக்கும்!

சாதனை உன்னுள்
செறிந் திருக்கும் - தக்க
தருணம் வந்தாலது
தலை நிமிர்த்தும் - பலர்
நிலை உயர்த்தும்!

-செந்தளிர் - 2-9-88
சென்னை வானொலி

ஆசைப் படாமல் வாழ்ந்திடலாம்
அச்சப் படாமலும் வாழ்ந்திடலாம்
ஓசைப் படாமல் வாழ்ந்திருந்தால்
உலகம் உன்னை மறந்துவிடும்!

தூசுப் படாமலும் வாழ்ந்திடலாம்
துக்கப் படாமலும் வாழ்ந்திடலாம்
நேசப் படாமல் வாழ்ந்திருந்தால்
நானிலம் உன்னை ஒதுக்கிவிடும்!

கொள்கை யில்லாமல் வாழ்ந்திடலாம்
கோப மில்லாமலும் வாழ்ந்திடலாம்
கல்வி யில்லாமல் வாழ்ந்திருந்தால்
காலம் உன்னைக் கழித்துவிடும்!

திறமை யில்லாமல் வாழ்ந்திடலாம்
தெளிவில் லாமலும் வாழ்ந்திடலாம்
முறையில் லாமல் வாழ்ந்திருந்தால்
மேவும் உறவுகள் விலகிவிடும்!

-தமிழ்ப்பணி
சூன் 1988

## ○ கடல்

உலகில் நிலமே ஒருபங்காம் - விரி
உவர்நீர்க் கடலோ முப்பங்காம்!
அலகில் பெருமைகள் கொண்டிருக்கும் - நம்
ஆழிதரும் பொருள் பலவாகும்!

உணவிற் குயிரே உப்பாகும் - அந்த
உப்பைத் தருவதும் கடலாகும்!
மணிமணி யாகவே நகைசெய்ய - ஒளி
முத்துகள் விளைப்பதும் கடலாகும்!

கதிரவன் கிரணக் கைகளினால் - நறுங்
காற்றெனத் தன்னுரு மாறியபின்
அதிர்ந்திடும் இடியும் மின்னலுடன் - மண்ணில்
அடைமழை பெய்வதும் கடலாகும்!

வையப் போர்வை கடலாகும் - நீல
வான்முகம் பார்ப்பதும் கடலாகும்!
கையசைத் தெவரும் ஆணையிட்டால் - சிறிதும்
கலங்கா திருப்பதும் கடலாகும்!

மீன்வளம் மிக்கதும் கடலாகும் - கரை
மணல்வெளி நெளிவதும் நண்டாகும்!
தான் எனும் ஆணவம் அணுவுமின்றிக் - கப்பல்
சுமப்பதும் இங்கே கடலாகும்!

## ○ மலை

மண்ணில் விளங்கும் பொருள்களிலே
விண்வரை உயர்ந்தது மலையாகும்
எண்ணில் செல்வம் மக்களுக்கு
ஈவதும் என்றும் மலையாகும்!

அடர்ந்தநற் காடுகள் நிறைந்திருக்கும்
அகிலுடன் தேக்கும் செறிந்திருக்கும்
படர்ந்திடும் செடிகொடி மூலிகைகள்
பாரவர் நோய்க்கு மருந்தாகும்!

மான்களும் மயில்களும் விளையாடும்
மரங்களில் குயிலினம் இசைபாடும்
யானைகள் கூட்டம் பவனிவரும்
யாண்டும் இயற்கை எழில்கொஞ்சும்!

அருவியில் வெள்ளம் பெருகிவரும்
ஆயிரம் கனிவளம் உருகிவரும்
பெரியவர் சிறியவர் குளிக்கையிலே
பெரும்பே ரின்பம் மலர்ந்துவரும்!

வையப் போர்வை கடலாகும் - நீல
வான்முகம் பார்ப்பதும் கடலாகும்!
கையசைத் தெவரும் ஆணையிட்டால் - சிறிதும்
கலங்கா திருப்பதும் கடலாகும்!

மீன்வளம் மிக்கதும் கடலாகும் - கரை
மணல்வெளி நெளிவதும் நண்டாகும்!
தான் எனும் ஆணவம் அணுவுமின்றிக் - கப்பல்
சுமப்பதும் இங்கே கடலாகும்!

## ○ மலை

மண்ணில் விளங்கும் பொருள்களிலே
விண்வரை உயர்ந்தது மலையாகும்
எண்ணில் செல்வம் மக்களுக்கு
ஈவதும் என்றும் மலையாகும்!

அடர்ந்தநற் காடுகள் நிறைந்திருக்கும்
அகிலுடன் தேக்கும் செறிந்திருக்கும்
படர்ந்திடும் செடிகொடி மூலிகைகள்
பாரவர் நோய்க்கு மருந்தாகும்!

மான்களும் மயில்களும் விளையாடும்
மரங்களில் குயிலினம் இசைபாடும்
யானைகள் கூட்டம் பவனிவரும்
யாண்டும் இயற்கை எழில்கொஞ்சும்!

அருவியில் வெள்ளம் பெருகிவரும்
ஆயிரம் கனிவளம் உருகிவரும்
பெரியவர் சிறியவர் குளிக்கையிலே
பெரும்பே ரின்பம் மலர்ந்துவரும்!

## ○ ஆறு

நேரே தவழ்ந்து செல்லாமல்
நெளிந்து வளைந்து செல்கின்ற
ஆறே! உன்றன் அருமைகளை
யாரே முற்றும் விளம்பிடுவார்!

உலகம் தோன்றிய நாள்முதலாய்
உயர்ந்தோர் போற்றும் பண்பாடும்
கலைகள்; காப்பியச் செல்வமெலாம்
கனிந்தன உன்றன் மடியில்தான்!

வாழை தென்னை செங்கரும்பும்
வயல்கள் தோறும் நெற்கதிரும்
தாழா தென்றும் செழிப்பதற்குத்
தாய்ப்பா லானவள் நீயன்றோ?

இமயம் தொடங்கிக் குமரிவரை
இலங்கும் ஆறுகள் ஒருங்கிணைந்தால்
எமக்கிங் குண்டோ வறட்சியுமே?
இல்லை வெள்ளச் சேதமுமே!



புதிதாய் உலகம்: புதிதாய் மக்கள்
புதிதாய்ப் பொழுதினி தொடங்கும் - பழம்
பழுதுகள் மூலையில் அடங்கும்!

கம்பனும் ஒரு கவிஞனோ...! 55

சிந்தை மகிழ்ந்தது 57

தைமகள் உதவட்டும் 59

உருப்படலாம் 61

வென்றார்! வாழ்க! 62

சுக்கிலமே! சுட்டெரிப்பாய்! 65

அகிலம் போற்றும் 67

தியாகச் சுடர் வாழ்க! 68

## கம்பனும்
## ஒரு
## கவிஞனோ...!

---

காவிய புரியில் கவிதை மாளிகை
கவினுற நிறுவிக் கனிதமிழ் வளர்த்த
கம்ப நாடனோர் கவிஞனே அல்லன்!

ஒவ்வொரு நொடியும் உளந்தடு மாறியே
பிழைகள் வளர்த்துப் பொழுதுகள் தேய்க்கும்
மாந்தர் இனத்தின் மனநோய் நீங்க
மருந்தென வாய்த்த மனித மூலிகை!

பிள்ளைப் பாசம்: புத்திர சோகம்
உடன்பிறப் பன்பு: உண்மை நட்பு!
கள்ளம் அறியாக் காதலர்ப் பண்பு!
தீநெறி தழுவின் சூழும் வன்பு!
ஒன்பான் சுவைகள் பன்மணிச் செறிவு
எழிலார் காட்சி இலங்கிடும் மாட்சி
கற்பனைப் பொதுமை அற்புதப் புதுமை

இத்துணை செல்வமும் இலவச மாகவே
வையந் தழைக்க வாரி வழங்கிய
கம்ப நாடனோர் கவிஞனே அல்லன்
காலம் நல்கிய காவிய வள்ளலே!

-வாழியூர் கம்பன் கழகம்
9-ஆம் ஆண்டு
மலர்

## ○ சிந்தை மகிழ்ந்தது

சித்திரை வந்தது: சிந்தை மகிழ்ந்தது
செந்தமிழ் வீரம் பிறந்தது - மறத்
தமிழரின் தூக்கம் பறந்தது!

இத்தரை மீதில் இன்பத் தமிழ்மொழி
இனவுணர் வெங்கும் கிளர்ந்தது - நாக்குத்
தினவினர் கொட்டம் தளர்ந்தது!

முத்திரை பதித்து முத்தமிழ் வளர்க்க
மேதையர் கூட்டம் எழுந்தது - அறியாப்
பேதையர் கூட்டம் விழுந்தது!

இதய வானிலே உதய சூரியன்
எழுகதிர் விரித்துக் கிளம்பும் - ஈழம்
என்றுமே நமதென விளம்பும்!

விதிதான் இதுநாள் வீழ்த்திய தென்னும்
வாய்வே தாந்தம் கிழியவும் - தூய
வெற்றி எனுந்தேன் பிழியவும்

புதிதாய் உலகம்: புதிதாய் மக்கள்
புதிதாய்ப் பொழுதினி தொடங்கும் - பழம்
பழுதுகள் மூலையில் அடங்கும்!

## ○ தைமகள் உதவட்டும்

மந்திகள் எல்லாம் ஆண்டது போதும்
மன்னவன் ஆளட்டும் - அண்ணனின்
பின்னவன் ஆளட்டும்!

வந்தவ ரெல்லாம் வதைத்தது போதும்
வாழ்பவர் ஆளட்டும் - மண்ணின்
மைந்தர்கள் ஆளட்டும்!

குந்திக் கிடந்தவர் குமைந்தது போதும்
கொள்கையர் வெல்லட்டும் - வெற்றி
குவிந்ததைச் சொல்லட்டும்!

இந்தியன் என்பது இரண்டாம் பட்சம்
என்மொழி தழைக்கட்டும் - இனிமேல்
என்னினம் பிழைக்கட்டும்!

கந்தை உடுத்திக் கஞ்சிக் கலைபவர்
கிழக்கினைப் பார்க்கட்டும் - 'சூரியன்'
கிளர்ந்தெழுந்(து) ஆர்க்கட்டும்!

தந்தையர் தாயர் சித்தம் தெளிந்திடத்
தைமகள் உதவட்டும் - இன்பத்
தைமகள் உதவட்டும்!

## ○ உருப்படலாம்

குறளைப் படித்தால் உருப்படலாம் - திருக்
குறளைப் படித்தால் உருப்படலாம்!
குருட்டுப் போக்கில் வாழும்மனிதா! - மன
இருட்டைப் போக்கி ஒளியை ஏற்றும்...

(குறளைப்...)

மாந்தருள் மாந்தர் வெகுசிலரே - புவி
மாந்தருள் மிருகம் மிகப்பலரே!
மாந்தருள் தெய்வ நிலையெய்த - நல்ல
வழித்துணை யாகிடும் விரிகதிராம்...

(குறளைப்...)

நுனிப்புல் ஆய்வுகள் பயனுமில்லை - தினம்
நுனிநா முணுப்பும் தேவையில்லை
மணிமணி யானநற் கருத்துகளை - நம்
மனமெனும் பாத்தியில் ஊன்றவரும் ..

(குறளைப்...)

அணிஅணி யாகப்பல் நூல்வரலாம் - உன்
அகத்தைத் தொடலாம்: சுகம்தரலாம்!
கனிந்தன எல்லாம் கனிகளல்ல - அறிவுக்
கனியாம்! நமதிரு கண்ணின்மணியாம்...

(குறளைப்...)

-வள்ளுவர் வழி
பிப்ரவரி-மார்ச் 89

## ○ வென்றார்! வாழ்க!

*கண்ணிரண்டும் காண்பதற்கு*
*ஒளியும்: அந்தக்*
*கண்ணிரண்டைக் காப்பதற்கு*
*இமையும் வேண்டும்*
*மண்ணுறங்கும் பொன்னெடுக்க*
*உழைப்பும்: மங்கை*
*மணிக்கழுத்தில் பொன்னுறங்கப்*
*பணமும் வேண்டும்!*
*எண்திசையும் பரந்திருக்கும்*
*மாந்தர் உள்ளம்*
*எப்பொழுதும் தெளிந்திருக்க*
*என்ன வேண்டும்?*
*என்நண்பர் இராசவேலன்*
*இயற்றி யுள்ள*
*'இன்பக்களஞ் சியம்'போன்ற*
*நூல்கள் வேண்டும்!*

பதினைந்து கட்டுரைகள்
பொதிந்தி ருக்கும்
புதையலிதை எழுத்தெண்ணிப்
படித்துப் பார்த்தேன்!
மதிநிறைந்த புகழேந்தி
கிருட்டிணப் பிள்ளை
வேதநாயகர் கம்பநாடர்
கவிதை தம்மைப்
பதைப்பின்றி நன்காய்ந்து
பாம ரர்க்கும்
புரியுமாறு எழுதியுள்ளார்:
நாமெல் லோரும்
பதிலுக்கு இவர்க்கென்ன
செய்ய வேண்டும்?
பொன்னளந்து எடைக்குஎடை
வழங்க வேண்டும்!

வெந்நீரை ஊற்றுவதால்
விதைமுளைக் காது
வாய்ப்பந்தல் விரிப்பதனால்
செயல்முளைக் காது
தன்னலமே உயிரென்று
வாழ்வோர்க் கெல்லாம்
சரித்திரத்தில் அணுவளவும்
இடம்கிடைக் காது
முந்துமிந்த பேருண்மை
புரிந்த தால்தான்
முத்தமிழ்க்கு விழாக்காணும்
இராச வேலன்
அந்தரத்தில் நீந்துகின்ற
சூரி யன்போல்
அரியதொரு நூல்தந்தார்!
வென்றார்! வாழ்க!

-வாழியூர் வே. இராச வேலனாரின்
'இன்பக் களஞ்சியம்'
நூலுக்கு வழங்கிய அணிந்துரை

## ○ சுக்கிலமே சுட்டெரிப்பாய்!

கண்ணாடிச் சில்லிகளே
 வைரம்: கந்தல்
காகிதத்துக் குப்பைகளை
 பூக்கள்: பாதிப்
பெண்மையது நிறைந்தவனே
 வீரன்: பச்சைப்
பாம்புகளே மல்லிகைப்பூங்
 கொடிகள்: நீர்த்த
சுண்ணாம்பே பசுவின்பால்
 என்றே நம்பித்
தூங்கிவிட்ட தமிழரெல்லாம்
 சுக்கில மே:உன்
பொன்னொளியால் கண்விழித்தார்
 கனிந்த திங்கே
பைந்தமிழர் நல்லாட்சி!
 வருக! வாழ்க!

ஆற்றில்நீர் பெருக்கெடுத்து
ஓடும் போது
ஆலிலையைத் தெப்பமென
விடுக்க லாமா?
போற்றுவதற் குரியவரைத்
தூற்று வோரைப்
பின்பற்றித் தன்வயிற்றை
வளர்க்க லாமா?
சாத்தான்கள் பெண்ணுருவம்
கொண்டி ருந்தால்
சமுதாயம் பரிதாபம்
கொள்ள லாமா?
சேற்றில்நெளி புழுக்களவை
என்று ணர்த்த
சுக்கிலமே! சுட்டெரிப்பாய்!
வருக! வாழ்க!

-தமிழ்ப்புத்தாண்டு மலர்
மாலை முரசு 15-4-1989

மானுடம் வென்றிடல் வேண்டும் - இந்த
மன்பதை செழித்திடல் வேண்டும்
கானிடை மூலிகை போன்றே - இங்கே
கற்றவர் இயங்குதல் வேண்டும்!

ஏச்சுகள் பேச்சுகள் சூழும் - பல
எதிர்ப்புகள் புயலென வீசும்
மூச்செலாம் சேவையென்றிருந்தால் - நய
வஞ்சகம் வாய்தனை மூடும!

விட்டுக் கொடுக்கவும் வேண்டும் - பணிகள்
விரைந்தே ஆற்றவும் வேண்டும்
தொட்டுக் காட்டவும் வேண்டும் - நல்ல
திட்டங்கள் தீட்டவும் வேண்டும்!

சரித்திரம் என்பதோர் பதிவேடு - இதில்
திருப்பெயர் பதித்திடும் துடிப்போடு
அறிவுப் பணிசெய நடைபோடு - இந்த
அகிலம் போற்றிடும் மகிழ்வோடு!

## ○ தியாகச் சுடர் வாழ்க!

உற்பத்திப் பொருட்கள் விற்க
ஊர்தோறும் அலைந்த பேர்கள்
நற்புத்தி கொண்டோர் போன்றே
நம்நாட்டில் நுழைந்தார்: நம்மைச்
சொற்புத்தி கேட்க வைத்தார்
தேசத்தை அடிமை கொண்டார்
கற்காலக் கொடுமை யெல்லாம்
குவிந்தன! அந்த வேளை...

வானகமும் கிழிய வில்லை
முப்பத்து மூன்று கோடி
தானவரும் தரையை நோக்கித்
தடாலென்று குதிக்க வில்லை
மானமுடன் ஆங்கி லேய
முரடருடன் மோத வில்லை!
சேனைபல கோடி யென்றே
திரண்டெழுந்தோர் தியாகி கள்தாம்!

நியாயங்கள் கானல்: போலி
நடிப்பேஇள வேனில் என்னும்
வியாதிகளே வரலா றாகி
வீங்கியுள்ள நாட்டில்; மேனாள்
தியாகிகளின் துயர்தொ குத்தே
சிறந்ததொரு நூலாய்த் தந்தார்:
தியாகி'இரா மசாமி'! சிந்தை
தெளிந்தசாமி! அவர்க்கென் வாழ்த்து!

-தியாகி எம். கே. இராமசாமி
அவர்களின்
'வேலூர்ச் சிறையில்
கல்லுடைத்த தியாகிகள்'
நூலுக்கு வழங்கிய
அணிந்துரை



தாழ்ந்த தமிழரின் தலைகள் நிமிர்த்திட
ஒருநூற் றாண்டு நிறைவாய் வாழ்கவே!

கொள்கைக் கோவலன் 72

நூறாண்டு வாழ்க நிலைத்து 73

எமருதமை வேலா 74

குணக்குன்றே! வருக! வாழ்க! 76

விதைமனிதர் நன்னிழலே! 79

புகழ்ச் சிகரம் 82

குருதி கொட்டும் நெஞ்சம் 85

சஞ்சீவி சரிந்த தம்மா! 87

புன்னகை அரசே! பைந்தமிழ்க் கடலே
நன்னடை நல்கும் நானிலத் திருவே
சரியெனப் பட்டதைத் துணிவுடன் மொழியும்
அரிமா அனையநற் கருத்துப் புதையலே!

'பதவி மாதவி' பக்கம் ஈர்ப்பினும்
'கழகம், என்னும் 'கண்ணகி' தன்னைக்
கைவிட் டோடாக் கொள்கைக் கோவல!

தமிழக இன:மொழிச் சுடராய் உலாவருந்
திராவிடச் சிங்கமே! அறுபது சித்திரை
இனிதாய்க் கண்ட: 'அன் பழகரே!' இனிநீர்
தாழ்ந்த தமிழரின் தலைகள் நிமிர்த்திட
ஒருநூற் றாண்டு நிறைவாய் வாழ்கவே!

-பேராசிரியர் க. அன்பழகன்
மணிவிழா வாழ்த்து
16—4—1982

## ○ நூறாண்டு வாழ்க நிலைத்து!

தேவராசன் என்கின்ற செந்தமிழ் மாவீரர்
காவிலுறுந் தென்றல் கடுமுழைப்பர் - ஆவலுடன்
ஒல்லும் வகையெல்லாம் ஊரவர்க்குத் தொண்டாற்றும்
நல்லார் இவர்வாழ்க நன்கு.

காலையிலோர் கட்சி: கடும்பகலில் வேறொன்று
மாலையிலோ இன்னொன்றில் மூழ்காமல் - காலமெலாம்
கண்ணின் மணியாய்க் கழகத்தைப் போற்றுமிவர்
விண்தோய் புகழ்சேர்த்தார் வென்று.

மணிவிழாக் காண்கின்ற மாண்புடையார் வேலூர்க்(கு)
அணியாய்த் திகழ்கின்றார் அன்னார்த் - துணைமகிழப்
பேராளர் நெஞ்சுவப்பப் பல்வளமும் பெற்றிங்கே
நூறாண்டு வாழ்க நிலைத்து.

-வேலூர் சட்டமன்ற உறுப்பினர்
திரு. வி. எம். தேவராசு
மணிவிழா வாழ்த்து
மாலைமுரசு 2—8—1981

## ○ எமதருமை வேலா

எல்லோர்க்கும் நல்லவராய்
இருப்ப வர்கள்
இவ்வுலகில் மிகச்சிலரே!
அவர்க ளுள்ளும்
வல்லவராய் நற்றொண்டு
ஆற்று வோர்கள்
விரல்விட்டு எண்ணிடலாம்!
தமிழ கத்தில்
நல்லவராய்: வள்ளுவரின்
நெறிப ரப்பும்
வல்லவராய் விளங்குகின்ற
தூய ருள்ளும்
எள்ளளவும் புகழ்விரும்பாப்
புனிதர் யாரோ?
எமதருமை 'வேலா'தான்
வேறு யாரே!

சிந்தனையில் திருக்குறளிதான்
நித்த நித்தம்
செயல்முறையில் திருக்குறள்தான்:
புவியின் எட்டாம்
விந்தையிலும் விந்தையென
விளங்கும் வண்ணம்
வள்ளுவத்தை வையகத்தில்
பரப்பு தற்குத்
தந்தையென முன்னின்று
இதழ்ந டத்தும்
சீர்‘அரச மாணிக்கம்’
நோயால் வாடி
நொந்திருக்கும் கொடுமையெலாம்
மின்ன லாகி
நூறாண்டு நலமுடனே
வாழ்வார்: உண்மை!

-குறளியம்
மே. 1989

## ○ குணக் குன்றே! வருக! வாழ்க!

பலநூறு ஆண்டுகளாய்
இருண்டி ருந்த
பைந்தமிழர் நாட்டினிலே
சூரி யன்போல்
அலர்கதிரைப் பரப்பவந்தார்
வைக்கம் வீரர்
அவர்நெறியைப் பின்தொடர்ந்தார்
அறிஞர் அண்ணா!
சிலர்பலராய் மாறுதற்கே
கடுமை யாகத்
தினந்தோறும் உழைத்துயர்ந்தார்
கலைஞர்: ஆரூர்க்
கலைஞர்க்கே இதயமாகத்
திகழ்ப வர்யார்?
குணக்குன்றாம் அன்பழகன்
அண்ண லன்றோ!

அடுக்கடுக்காய் வெற்றிகளைக்
குவித்த போழ்தும்
அடுத்தடுத்துச் சோதனைகள்
சூழ்ந்த போழ்தும்
கடுகளவும் கொள்கையிலே
மாற்ற மின்றிக்
கழகத்தின் நலன்காக்க
அரண்போல் வாழும்
அடிக்கரும்புப் பேச்சுக்குச்
சொந்தக் காரர்:
அகிலத்தில் நேர்மைக்கோர்
எடுத்துக் காட்டு!
படிக்கின்ற இளைஞரைப்போல்
தோற்றம்: ஆனால்
பாருக்கே வழிகாட்டும்
அறிவின் ஏற்றம்!

வரலாற்றின் ஊற்றெனவே
திகழும் எங்கள்
வேலூரின் உயிர்நாடி
நகர மன்றம்
வரவேற்று மகிழ்கிறது!
வருக! வாழ்க!
வரலாற்றை உருவாக்கத்
தாங்கள் சிந்தும்
நிறைவான சொற்பொழிவை
நெஞ்சில் தேக்கி
நித்தியமும் நடைபயின்று
நாட்டி லுள்ள
கறைபோக்கக் காத்திருக்கும்
தொண்டர் சார்பில்
கரம்குவித்து வணங்குகிறேன்!
வருக! நன்றி!

-24-8-1988 வேலூர்
நகர மன்றம் வருகைதந்த
'பேராசிரியர்' அவர்கட்கு
நகரத் தந்தை வாசித்தளித்த
வரவேற்பு மடல்

## ○ விதை மனிதர் நன்னிழலே!

சொலல்வல்லார்: சோர்விலார்
சிந்தை எல்லாம்
செந்தமிழர் நலங்காக்கும்
தூய எண்ணம்
அளப்பரிய சோதனைகள்
சூழ்ந்த போழ்தும்
அணுவளவும் தொய்வடையா
எஃகு நெஞ்சம்:
கலகலப்பாய் தோழரிடம்
பழகும் பண்பு:
கடமைகளை ஆற்றுவதில்
சுறுசுறுப்பு:
உலகினிலே இவற்றிற்கோர்
தக்க சான்றாய்
உலவுகின்ற அமைச்சரேறே!
வருக! வாழ்க!

காலையிலே ஒருகட்சி
மாலை வந்தால்
கட்டாயம் மறுகட்சி
என்றே வாழும்
சாலையோரச் சராசரிகள்
கோடி: ஆனால்
சலனங்கள் எதுவுமின்றிக்
கழகம் என்னும்
சோலையிலே பூத்ததனிப்
பூவாய் நீதான்
துளியேனும் வாடாமல்
விளங்கு கின்றாய்!
சேலைகளால் சிலநேரம்
சூழும் தொல்லை!
சூரியன்நீ! உன்னிடத்தில்
களங்கம் இல்லை!

புதுமைகளைச் செய்வதாகச்
சொல்லி: நாட்டின்
பொதுச்சொத்தைத் தன்சொத்தாய்
மாற்றிக் கொண்ட
பதுமைநிகர் மாந்தர்களை
அறிந்தோம்! அன்னார்
பதடியெனப் பறந்தகதை
தெளிந்தோம்! இன்றோ
பொதுப்பணித்துறை நல்லமைச்சாய்த்
திகழு கின்ற
பெருந்தகையே! துரைமுருக!
கலைஞர் என்னும்
விதைமனிதர் நன்னிழலே!
தமது ழைப்பால்
வரலாற்றைப் புதுப்பிக்கும்
வேந்தே! வாழ்க!

-30—6—1989
வேலூர் ஊராட்சி
ஒன்றிய வரவேற்பில்
வழங்கியது

## ○ புகழ்ச்சிகரம்

உயர்திணையாய் பிறந்தவிட்ட
மாந்த ரெல்லாம்
உயர்திணையாய் வாழ்வதில்லை!
வாழ்ந்த போதும்
உயர்ந்தவர்தம் நெஞ்சமென்னும்
இராச்சி யத்தில்
உயர்பதவி பெறுவதில்லை:
கால மெல்லாம்
அயராமல் உழைத்துழைத்து
வெற்றி பெற்ற
அன்புஇமயம் வி.ஜி.பி.
அண்ண லாரோ
உயர்திணையாய் வாழ்ந்திருந்தார்:
கலைவ ளர்த்தே
உயர்ந்தவர்கள் பாராட்டும்
பேறும் பெற்றார்!

‘உலகத்தின் ஆயுளிலே
நமது ஆயுள்
ஒருகணமே’ என்கின்ற
தத்து வத்தைத்
தெளிவாக உணர்ந்தவரே
திசைகள் போற்றும்
செம்மலவர் வி.ஜி.பி.
அதனா லன்றோ
அலைகடலும் புறங்காணும்
உழைப்பை நல்கி
ஆர்வமுடன் பொருள்குவித்தார்:
எனினும் அந்த
அளப்பரிய செல்வத்தால்
கோடி தொண்டு
ஆற்றியதால் ‘புகழ்ச்சிகரம்’
சென்ற மர்ந்தார்!

இல்லாமை இருந்ததுண்டு!
இவரி டத்தில்
இயலாமை இருந்ததுண்டு
தொடக்க நாளில்!
கல்லாமை எனுமிருட்டை
விரட்டு தற்குக்
கடிதுழைக்கும் அறிஞர்களைக்
காணும் தோறும்
தள்ளாமை ஒருநாளும்
இருந்த தில்லை:
தழுவுகின்ற பெரும்பண்போ
குறைந்த தில்லை!
வெள்ளத்தில் மணல்மேடு
சரிவ துண்டு!
வரலாற்றில் வி.ஜி.பி.
மறைவ துண்டோ?

-அறிவுலகம் கண்ட
அறிஞர் வி.ஜி.பி.
நூலுக்கு வழங்கிய
சிறப்புப் பா

## ○ குருதி கொட்டும் நெஞ்சம்

இளைத்த மேனி! எஃகிதயம்!
தமிழ்பால் என்றும்
இமயத்தை விஞ்சுகின்ற
தூய பற்று!
இளஞ்சிரிப்பை இதழோரம்
தேக்கி: நம்மை
ஈர்த்துஉரை யாடவைக்கும்
உண்மை அன்பு!
களைப்பதனைப் புறமுதுகிட்
டோடச் செய்தே
கனித்தமிழைக் காத்து(உ)வந்த
பண்பு! வானம்
பிளந்தாலும் நெறிதவறாக்
கொள்கைக் குன்றம்!
பிரிந்ததம்மா! நம்நெஞ்சம்
குருதி சிந்த...!

மடிநிறைய பொருள்சேர்க்குந்
சிந்தை யின்றி
முப்போதும் முத்தமிழை
வளர்த்தார்! ஏணிப்
படியெனவே கிடந்தென்றும்
புலவர் பல்லோர்
பெருமைகளைப் புவியறியச்
செய்தார்! கோடை
இடிவந்து நம்தலையில்
வீழ்ந்த தைப்போல்
இன்றேனோ மறைந்துவிட்டார்!
உயிரும் ஊனும்
தடுமாற்றம் கொள்ளுதையோ!
அந்தோ..! நாகை
சிங்கார வேலவரைக்
காண்ப தென்றோ...!

-சைவ சித்தாந்தக் கழக
நண்பர் த. சி. வேலன்
4-11-1987 மறைந்த
பொழுது பாடிய
இரங்கற்பா...
-செந்தமிழ்ச் செல்வி
பிப்ரவரி 1988

## ○ சஞ்சீவி சரிந்ததம்மா!

ஆலமர மொன்று ஆற்றினில் விழுந்தது
ஆற்றா தழுகு தம்மா! - அதன்
அறிவுக் கிளைதனில் ஆயிரம் கூடுகள்
செறிவாய் நிறுவிய அன்புப் பறவைகள்
ஆற்றா தழுகு தம்மா! - அந்தோ...
அலறித் துடிக்கு தம்மா!

ஞாலம் மற்றொரு 'அகத்தியர்' தனையே
நாள்தோறும் கண்ட தம்மா - தன்
நாவால் எழுத்தால் நற்றமிழ் வளர்த்த
'மூவாப்' புகழுடைப் பொன்னுயிர் வீணையின்
நரம்புகள் அறுந்த தம்மா - தமிழரின்
வரம்புகள் உடைந்த தம்மா!

சாலச் சிறந்த தமிழ்ப்பே ரிமயம்
சாந்துணை கற்ற தம்மா! - அரிய
சரித்திர நூல்களைத் தந்த தம்மா!
சான்றோர் சான்றாய் உலவிய எங்களின்
'சஞ்சீவி' மலையின்று சரிந்த தம்மா! - கோடித்
துயரம் சிந்தையில் நிறைந்த தம்மா!

காலில் குத்திய தொருமுள் எனினும்
கண்தான் குளமாய் மாறும்: அதுபோல்
கனிதமிழ் காத்திடக் காலங்கள் தோறும்
கருத்துக் குருதியாய்ப் பெருகிய காவிரி
வரண்ட பாலா றான தம்மா! - தூய
வரலா றாகியே வாழு மம்மா!

-டாக்டர். ந. சஞ்சீவி
22-8-88 மறைந்த
பொழுது பாடிய
இரங்கற் பா...
-செந்தமிழ்ச் செல்வி
செப்டம்பர் 1988

# ○ கலைஞரியல்



இந்தப் புவியில் எத்துணை தமிழர்
அத்துணை பேரும்... ஆமாம்! குழந்தைகள்!
தந்தையும் தாயும் தீந்தமிழ்க் கலைஞரே!

| | |
|---|---|
| கல்லில் பொறித்த காவியம் | 91 |
| உலகத் தமிழர் கலைஞர் | 93 |
| நல்ல மேய்ப்பர் | 95 |
| கண்ணனைய கலைஞர்க்கோ | 96 |
| கலைஞர் ஒருபருவராகம் | 98 |

## ○ கல்லில் பொறித்த காவியம்

தெளிந்த சிந்தையர்: சீர்த்த பண்பினர்
பளிங்கு நெஞ்சினர்: பார்வைக் கிளையவர்

துணிச்சல் மிக்கவர்: தூய வாழ்வினர்
கனிந்த மொழியினர்: கவிதை வல்லுநர்

ஓய்வு என்பதன் உறுபொருள் அறியா
காய்கதிர்ச் செல்வர்: காட்சிக் கெளியவர்

அண்ணன் நெறியில் அயரா துழைக்கும்
மன்பதை போற்றும் மாட்சிமை மிக்கவர்

இமிழ்'முர சொலி'த்தே எம்மை எழுப்பிய
தமிழின நாட்டின் தளபதி யானவர்

அன்னவர் யாரென அணுகிக் கேட்கின்
அன்னை நாட்டினை என்றும் ஆள்பவர்:

‘சின்னவர்’ சிலரின் சின்னத் தனத்தால்
எண்ணத் தொலையா இடரினில் மூழ்கியும்

என்றும் நிமிரும் இமயம் போன்றே
குன்றா திருக்கும் ‘கொள்கைச் சிங்கம்!’

‘கல்லில் பொறித்த காவிய’ மெனவே
நல்லர சமைத்த நற்றமிழ்க் கலைஞரே!

ஆண்டுகள் நூறு அன்னவர் வாழ்கென
அனைவரும் பாடி: ஆடுவோம் வாரீர்!

## ○ உலகத் தலைவர் கலைஞர்

உலகத் தலைவர் கலைஞரிவர்
உள்ளத் திலென்றும் இளைஞரிவர்
அலகில் புகழினைக் குவித்திடவே
அண்ணன் நெறிசெலும் வழிஞரிவர்
பலவகை ஆற்றலில் திளைத்திங்கே
பாப்புனை யும்நல் கவிஞரிவர்
கலகம் விளைக்கவே துடிக்கின்ற
கயவருக் கென்றும் பகைஞரிவர்!

இலைகளைச் சருகாய் மாற்றுபவர்
இனநலன் வழியெனப் போற்றுபவர்
அலையெனத் தொடரும் சோதனையை
அரும்பெருஞ் சாதனை யாக்குபவர்
மலையெனத் திமிர்ந்த தோளுடைய
மறவரும் போற்றும் மாண்புடையவர்
நிலைமையில் மாற்றும் நேர்கையிலும்
நெஞ்சம் குலையா இமயமிவர்!

நெஞ்சினில் நீதியைத் தேக்குபவர்
நற்றமிழ் வளர்ச்சியை ஊக்குபவர்
மஞ்சள் ஒளியுமிழ் பரிதியென
மன்பதை போற்றிட விளங்குபவர்
கொஞ்சும் தமிழினுக் கிடர்வரினும்
கொள்கை யொன்றில் குறைவரினும்
பஞ்சினில் நெருப்பெனப் பற்றுபவர்
பாய்ந்தே பொருது வெல்பவரே!

குடத்துள் ஒளிரும் விளக்கெனவே
கடலுள் கிடக்கும் முத்தெனவே
மடமையில் மூழ்கிய தமிழகத்தை
மலைமுகட்டிற் குயர்த்தவே வருகின்றார்
கடமையை மறந்த சிலருக்கும்
கவர்ச்சியில் விழுந்த பலருக்கும்
விடைகளைச் சொல்லவே வருகின்றார்
வாழ்த்துவோம்! வணங்கி வரவேற்போம்!

-கலைஞர் 59 ஆம்
பிறந்த நாள்
'எதிரொலி' சிறப்புமலரில்
வெளிவந்தது
-3—6—1981

## ○ நல்ல மேய்ப்பர்

இந்தத் தரையில் எத்துணை தலைவர்
அத்துணை பேரும்... ஆமாம்! மந்தைகள்
மேய்ப்பர் எவரெனில் முத்தமிழ்க் கலைஞரே!

இந்தப் புவியில் எத்துணை தமிழர்
அத்துணை பேரும்... ஆமாம்! குழந்தைகள்
தந்தையும் தாயுந் தீந்தமிழ்க் கலைஞரே!

அரசியல் ஆற்றில் எத்துணை மேடுகள்
அத்துணை மேடும்... ஆமாம்! மண்குதிர்
கொள்கைக் குன்றம் கூர்மதிக் கலைஞரே!

ஆட்சிச் சோலையில் ஆயிரம் மலர்கள்
அத்துணை மலரும்... ஆமாம்! கள்ளிகள்
எங்கும் என்றும் மணக்கும் முல்லையோ
எங்கள் உயிராம் சிங்கக் கலைஞரே!
வள்ளுவர் குறளென மண்மிசை
வாழ்க! வாழ்கவே! வருங்காலம் நமதே!

-கரூர்ப் பாவலர் கன்னல்
தொகுத்த 3-6-1984
சிறப்பு மலரில் வெளிவந்தது

## ○ கண்ணனைய கலைஞர்க்கோ!

தெள்ளுதமிழ் வள்ளுவர்க்குக்
கோட்டங் கண்ட
தென்னவர்தம் கண்ணனைய
கலைஞர்க் கோவே!
கள்ளமனப் பான்மையுடன்
இங்கே வந்த
காகுத்தன் மரபினரை
எதிர்த்து நின்ற
வெள்ளைமன இராவணனின்
ஆற்றல் வீரம்
வரலாற்றில் படித்ததுண்டு
கண்டோ மில்லை!
தள்ளுபடிக் கொள்கையரை
எதிர்த்து: எங்கள்
தலைநிமிர்த்தும் உன்னுருவில்
அவனைக் கண்டோம்!

எள்ளிநகை யாடிநம்மை
இழித்து ரைத்த
இருவேந்தர் முடித்தலையில்
கற்கள் வைத்த
வல்லவனாம் குட்டுவனின்
ஈரம் வீரம்
வரலாற்றில் படித்ததுண்டு
கண்டோ மில்லை!
நல்லவர்போல் நடித்திங்கே
நாட்டை ஏய்க்கும்
நச்சுமனங் கொண்டவரை
வேர றுக்க
கொள்கைகளை மோதவிட்டு
வெற்றி காணும்
கலைஞரேறே! உன்னுருவில்
அவனைக் காண்போம்!

-எதிரொலி
கலைஞர் மணிவிழா
மலரில் வெளிவந்தது
3—6—1984

## ○ கலைஞர்
## ஒரு பருவராகம்!

---

*சலசலக்கும் சருகோசை*
*தாளம்: மக்கள்*
*சந்தடியில் எழுமிரைச்சல்*
*ராகம்: மிக்க*
*கலகலக்கும் சில்லறைகள்*
*சிந்தும் ஓசை*
*கல்யாண கெட்டிமேளம்*
*என்றே நம்பி*
*அலையோசைத் திரைமயக்கக்*
*கவர்ச்சி தன்னில்*
*ஆழ்ந்திருந்த அருந்தமிழர்*
*கண்வி ழிக்கச்*
*சளைக்காமல் பாட்டிசைத்த*
*கலைஞ ரேறே*
*சத்தியஞ்செய் கின்றேன்!நீ*
*பருவ ராகம்!*

சாதனையின் ஊற்றுக்கண்
ஆகும் உன்பேர்
சரித்திரத்துப் பொன்னேட்டில்
பதியா வண்ணம்
சோதனைகள் பலகோடி
உனக்க ளித்தார்
சோற்றுக்கே நமையண்டிப்
பிழைக்க வந்தார்...
வேதனையாம் நெருப்பாற்றில்
நமைய மிழ்த்தி
வெற்றிகளைச் சிலகாலம்
திருடிச் சென்ற
சேதியெலாம் கவர்ச்சியெனும்
மோக ராகம்
தமிழினத்தின் உயிர்க்குயிர்நீ!
பருவ ராகம்!

உன்னோடு பொதுவாழ்வுப்
பயணம் செய்தும்
உன்சுகத்தில் சுகங்கண்டும்
துன்ப வேளை
உன்பாடு எனவுரைத்தும்
ஒதுங்கிச் சென்ற
ஒதியமரப் பேர்வழிகள்
இன்று எங்கே...?
தன்பாட்டு தந்தையவர்
பெரியார் தந்த
தன்மானப் பாட்டென்றே
தொடர்ந்தி சைக்கும்
பொன்பாட்டே! புவிப்பந்தில்
வாழு கின்ற
பைந்தமிழர்க் கென்றும்நீ!
பருவ ராகம்!

அமிழ்தனைய தமிழ்ச்சான்றோர்:

- எஸ். கே. ஜி. பி. கந்தசாமி,
  25, மண்டி வீதி, வேலூர்.
- ஏ. எஸ். ஏ. பரமசிவம்,
  88, லாங்கு பசார், வேலூர்.
- வி. ஆர். ஜெயராம்,
  ரங்கா நகை மாளிகை, வேலூர்.
- வி. ஆர். தங்கவேல்,
  91, சுண்ணாம்புக்கார வீதி, வேலூர்.
- வி. எஸ். ரேணு கோபால்,
  1/4, காட்டுப்பாடி சாலை, வேலூர்.
- வி. ஆர். இராதா கிருஷ்ணன்,
  2, காந்தி சாலை, வேலூர்.
- வெ. சோலை நாதன்,
  31, பெங்களூர் சாலை, வேலூர்.
- டாக்டர். த. குமரகுரு எம்.பி.பி.எஸ்.,
  குமரன் மருத்துவமனை, வேலூர்-6.
- டாக்டர் சி. எஸ். பழநி எம்.பி.பிஎஸ்.,
  அறிஞர் அண்ணா அரசு மருத்துவமனை, காஞ்சிபுரம்.
- டாக்டர் மு. இராசராசன் எம்.பி.பி.எஸ்.,
  சன் கிளினிக் 37/ஏ, பாபு ராவ் வீதி, வேலூர்.
- ஜி. இராமலிங்கம் எம்.ஏ.,
  நகர் மன்ற உறுப்பினர், வேலூர்.
- வி. பி. ஜோதி,
  நகர் மன்ற உறுப்பினர், வேலூர்.

O பெரும்புலவர் சிவசங்கரனார்,
சிவம் லாரி சர்வீஸ், ஆர்க்காடு.

O இரா. ஈசுவரப்பன்,
126, கடைவீதி, ஆர்க்காடு.

O வி. எஸ். இரமேஷ் குமார் பி.ஏ.,
95, மெயின் பசார், வேலூர்.

O க. இராசு பி.ஏ.,
27, மண்டி வீதி, வேலூர்.

O வா. சு. இராமச்சந்திரன்,
92, மண்டி வீதி, வேலூர்.

O எம். கே. ஈ. சோதி இராமலிங்கம்,
110/2, மண்டி வீதி, வேலூர்.

O ச. குமரவேல் எல்.எம்.இ.,
38, அகத்தி கிருஷ்ணப்ப செட்டி வீதி, வேலூர்.

O மா. சண்முக சுந்தரம் பி.எசி.,
57, மண்டி வீதி, வேலூர்.

O கு. லோகநாதன் எம்.ஏ.,
பாரதி நகர், காட்டுப்பாடி.

O கவிஞர். மா. சோதி பி லிட்.,
25, கலவை சாலை, ஆர்க்காடு.

O பெரும்புலவர் வே. இராசவேலன் எம்.ஏ ,எம்.எட்.,
தமிழாசிரியர், வாழியூர், ஒண்ணுபுரம் வழி, வ.ஆ.

O கோ. சம்பந்தன் எம்.ஏ.,
உதவியாளர், மாவட்ட நீதி மன்றம், வேலூர்.

O சு. இளைய குமார் எம் ஏ.,
இந்தியன் வங்கி, நௌஷாந்தி நகர், பம்பாய்.

O ந. நரசிம்மன்,
இயக்குநர், வேலூர் கிழக்கு ரோட்டரி, வேலூர்-9

- கா. ஜெகதீசன் எம்.எசி.,பி.எட்.,
  ஆசிரியர், கிருஷ்ணசாமி முதலியார் மேனிலைப்பள்ளி, வேலூர்.
- ஞா. முருகன் பி ஏ.,
  தலைவர், பேரூராட்சி சத்துவாச்சாரி, வேலூர்-9
- பி. வி. தங்கராசு,
  506-பகுதி I பாரதி நகர் சத்துவாச்சாரி, வேலூர்-9.
- வாசு. கண்ணன் பி.காம்.,
  49, லாங்கு பசார், வேலூர்.
- சு. முத்துக்குமார்
  மேனாள் தலைவர், வேலூர் வடக்கு ரோட்டரி சங்கம்.
- எம். வெங்கட சுப்பு பி.எஸ்ஸி.,பி.எல்.,
  தலைவர், அரிமா சங்கம் வேலூர்.
- மா. ஆறுமுகம் பி எசி.,
  தலைவர், பேரூராட்சி மன்றம், தொரப்பாடி வேலூர்.
- பா. திருநாவுக்கரசு,
  தேனீ அவையம் (நல்ல நூல் சுவைஞர்கள்)
  183, வீரப்பிள்ளை தெரு, பெங்களூர்-1.
- எம். கலையரசன் எம்.காம்.,
  ராஜம் மெடிகல்ஸ், கண்ணமங்கலம். வ. ஆ.
- இரா. ஜெகதீசன் பி.ஏ.,
  பாரத ஸ்டேட் வங்கி, இராணிப்பேட்டை.
- மா. அருளரசு பி.இ.,
  விரிவுரையாளர், வேலூர் பொறியியல் கல்லூரி, வேலூர்.
- கமால், இரும்பு வாணிபம், வேலூர்.
- ப. வெங்கடேசன் பி.எசி.,எம்.ஏ.,எம்.பில்.எம்.எட்., வேலூர்.
- சா. குப்பன்,
  ஆசிரியர், அரசு மகளிர் மேனிலைப்பள்ளி, ஆரணி.
- தோ. வே. ஆனந்த நாதன்,
  வி. எஸ். நாதன் அன் கோ., பிளாக் கம்பெனி,
  127, லாங்கு பசார், வேலூர்.

O கே. என். இராமச்சந்திரன்,
தலைவர், பன்னாட்டுத் தமிழுறவு மன்றம், காட்டுப்பாடி.

O அறிவுச்சுடர்,
செயலர், பன்னாட்டுத் தமிழுறவு மன்றம், காட்டுப்பாடி.

O எச். எஸ். எம். சேக் மீரான்,
செயலர், இஸ்லாமிய இளைஞர் கழகம், வேலூர்.

O வி. ஆர். அப்துல் ரஷீத்,
தலைவர், இஸ்லாமிய இளைஞர் கழகம், வேலூர்.

O ஏ. பி. முனவர் அகமது,
இயக்குநர், தெற்கு ரோட்டரி வேலூர்.

O மு. சுகுமார் எம்.ஏ.,எம்.பில்.,
தந்தை பெரியார் இல்லம்,
44, திருப்பூர் குமரன் தெரு, வேலூர்.

O ந. சங்கர நாராயணன்,
பாரத மிகுமின் நிறுவனம், இராணிப்பேட்டை.

O எம். கே. செல்வராசன் பி.ஏ.,
பாரத ஸ்டேட் வங்கி, வேலூர்.

O கவிஞர் வைரிதரளம்,
ஆசிரியர், கோவிந்தம்பாளையம், ஆறகழூர்
சேலம் மாவட்டம்.

O டி. என். சேசாசலம்,
பொறியாளர், 5 பாரதிதாசன் நகர், வேலூர்-2

O டாக்டர் வே. இரா. மாதவன்,
சுவடியியல், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

O நடிப்புச் செல்வர் அரிமா. ஜே. அண்ணாமலை,
செயற்குழு உறுப்பினர், சு.சா.மேனிலைப்பள்ளி, ஆரணி

O ஜேஸி. வின்சென்ட் இரத்தினசிங், வேலூர்-6

O இரா. சீனிவாசன் பி.எசி.,
நிறுவனத் தலைவர், காந்தி நகர் ஜேஸீஸ், வேலூர்.



கவிஞரின் 'அமுத வெள்ளம்' வெளியீட்டு விழாவில் திருக்குறளார் தேன்மழை பொழிகிறார். ஏ. எஸ். ஏ. பரமசிவம், கவிஞர். வேலூர் ம. நாராயணன், கவிக்கோ அப்துல் ரகுமான் வெ. சோலை நாதன், சிலம்பொலியார், வி. ஆர். இராதா கிருஷ்ணன் சுவைத்து மகிழ்கின்றனர்.

★ 6 — 2 — 1989 ★